உ

நற்கீரதேவர் அருளிச்செய்த

அகவலும்,

செங்கழுநீர் விநாயகர்பேரில்

# தேவாரமும்-கண்ணியும்

—(0)—




T. சாரதா புத்தகசாலை அதிபர்

T. S. துரைசாமி முதலியாரால்

பதிப்பிக்கப்பட்டது.

1923.

முரஹரி அச்சுக்கூடம், சென்னை.


4

உ

சுப்பிரமணியர் துணை.

நக்கீரதேவ ரருளிச்செய்த

# விநாயகரகவல்.

---

காப்பு.

நேரிசை வெண்பா.

அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற்றிற்
பிறந்ததொல் லைபோம் போகாத் துயரம்போம்—நல்ல
குணமதிக மாமருணைக்கோபுரத்தில் வீற்றிருக்கும்
கணபதியைக் கைதொழுதக்கால்.

கணபதி வணக்கம்.

ஆசிரிய விருத்தம்.

சீர்கொண்டகரிமுகமு மைந்துகையும்
சிறந்தவாபரணமுடன் ஒற்றைக்கொம்பும்
ஏர்கொண்டவிமலர்கடங் கலியைத்தீர்த்து
எழில்குகர்க்குமுன்பிறந்து யமரர்மெச்ச
பேர்கொண்டபிரணவமாய்ப் பிரணவத்துள்
பெருமைசிவலிங்கமென் வந்தமூலம்
கார்கொண்டபிண்ட மெங்குந்தானாய்
கார்த்திகேயக்கணபதியை வணங்குவாமே.

## அகவல்.

சீர்தருமூலச் செழுஞ்சுடர்விளக்கே
கார்நிறமேனிக் கற்பகக்களிறே
அல்லல்வினையை யறுத்தின்ஞான
வல்லபைதன்னை மருவியமார்பா
பொங்கரவணிந்த புண்ணியமூர்த்தி
சங்கரனருளிய சற்குருவிநாயகா
ஏழையடியே னிருவிழிகாண
வேழமுகமும் வெண்பிறைக்கோடும்
பெருகியசெவியும் பேழைவயிறும்
திருவளர்நுதலிற் திருநீற்றழகும்
சிறுத்தகண்ணுஞ் சீதளப்பார்வையும்
நறுந்திகழ்நாசியும் நாண்மலர்முடியும்
நவமணிமகுட நன்மலர்முடியும்
கவசகுண்டல காந்தியும்விளங்கச்
சிந்தூரத்திலகச் சந்தனப்பொட்டும்
ஐந்துகரத்தி னழகுவிற்றிருக்க
பாசவினையைப் பறித்திடுமங்குச
பாசத்தொளியும் பண்மணிமார்பும்
பொன்னுபரணமும் பொருந்துமுந்நூலும்
மின்னுமெனவே விளங்குபட்டழகும்
உந்திச்சுழியும் உரோமத்தழகும்
தொந்திவயிறுந் துதிக்கையுந்தோன்ற

வேதனும்மாலும் விமலனுமறியாப்
பாதச்சதங்கைப் பலதொலியார்ப்பத்
தண்டைச்சிலம்புந் தங்கக்கொலுசும்
எண்டிசைமண்டல மெங்குமுழங்கத்
தொகுருதுந்துமி தொந்தோமெனவே
தகுகுதிந்துமி தாளமுழங்க
ஆடியபாத மண்டர்கள்போற்ற
நாடியமெய்யடியார் நாளுந்துதிக்கக்
கருணைபுரிந்து காக்ஷிதந்தருள
இருளைக்கடிந்து எங்குநிறையைப்
பொங்குபேரொளியாப் பொன்மலைபோலத்
திங்கள்முடியான் றிருவுளமகிழ
வந்தவாரண் வடிவையுங்காட்டிச்
சிந்தைதளர்ந்த சீரடியார்க்கு
இகபரசாதன மிரண்டுமுதவி
அகவினைத்துன்ப மகந்தையறுத்து
மூலாதார மூச்சுடர்காட்டி
வாலாம்பிகைதன் வடிவையுங்காட்டி
மாணிக்கமேனி மலர்ப்பதங்காட்டிப்
பேணிப்பணியப் பீஜாக்ஷரமும்
ஓமென்றுதித்த ஓங்காரத்துள்ளே
ஆமென்றெழுந்த அக்ஷரவடிவும்

இடைபிங்கலைக ளிரண்டிநடுவே
கடைமுனை சுழிமுனைக் கபாலமுங்குறித்து
மண்டலமூன்றும் வாயுவோர்பத்துங்
குண்டலியசைவிலி கூறியநாடியும்
பூதமும்பொறியும் புகழ்குணமூன்றும்
வாதனைசெய்யு மறிவையுங்காட்டி
ஆருதார அங்குசநிலையைப்
பேருகின்ற பெருமையுங்காட்டி
பஞ்சமூர்த்திகள் பாகத்தமர்ந்த
பஞ்சசத்திகளின் பாதமுங்காட்டி
நவ்விடமௌவும் நடுவணைவீட்டில்
அவ்வுமாக்கினை அனுதிசதாசிவம்
மைவிழிஞான மனோன்மணிபாதமும்
கைவினிகனுகா நாதகீதமும்
கண்டுவணங்கக் கண்ணைத்திறந்து
விண்டலமான வெளியையுங்காட்டி
ஐம்பத்தோரெழுத் தக்ஷரநிலையை
இன்பச்சக்கர விதிதனைக்காட்டிப்
புருவநடுவணைப் பொற்கமலாசனன்
திருவிளையாடலின் திருவடிகாட்டி
நாதமுட்விந்தும் நடுநிலைகாட்டிப்
போதநிறைந்த பூரணங்காட்டி

உச்சிவெளிதனி லுள்ளொளிகாட்டி
வச்சிரம்பச்சை மரகதமுத்துப்
பவளநிறைந்த பளிங்கொளிகாட்டிச்
சிவகயிலாசச் சேர்வையுங்காட்டிச்
சத்தம்பிறந்த தலத்தையுங்காட்டித்
தத்துவந்தொண் ணூற் றாறையுநீக்கிக்
கருவிகரணக் களங்கமறுத்து
மருவியபிறவி மாயையைநீக்கி
உம்பர்கள்ரிஷிகள் ஒருவருங்காணு
அம்பரவெளியி னருளையுங்காட்டிச்
சத்திபராபரை சதானந்திநிராமய
நித்தியரூபி நிலைமையுங்காட்டி
அடியவர்ஞான வமிர்தமாயுண்ணும்
வடிவையறியும் வழிதனைக்காட்டி
நாசிநுனியில் நடக்குங்கலைகள்
வாசிவாவென்று வாங்கிப்பிடித்து
நின்மலவடிவாய் நிறுவித்தப்புறம்
சின்மயமான விதத்தையுங்காட்டித்
தாரதலமுழுதுந் தானாய்நிறைந்த
பராபரவெளியைப் பணிந்திடக்காட்டி
என்னுடலாவி யிடம்பொருளியாவுந்
தன்னுடைவசமாந் தவநிலைகாட்டி
நானெனுமாணவம் நாசமதாகத்
தானெனவந்து தயக்கந்தீர

ஆனகுருவா யாட்கொண்டருளி
மோனஞான முழுதுமளித்துச்
சிற்பரிபூரண சிவத்தைக்காண
நற்சிவநிஷ்கள நாட்டமுந்தந்து
குருவுஞ்சீஷனுங் கூடிக்கலந்து
இருவருமொருதனி யிடந்தனிற்சேர்ந்து
தாணந்தமகித் தற்பரவெளியில்
ஆந்தபோத அறிவைக்கலந்து
புவனத்தொழிலைப் பொய்யென்றுணர்ந்து
மவுனமுத்திரையை மனத்திலிருத்திப்
பெண்டுபிள்ளை பண்டுபதார்த்தங்
கண்டதுமாயைக் கனவெனக்காட்டிப்
பாசபந்தப் பவக்கடல்நீக்கி
ஈசனிணையடி யிருத்திமனத்தே
நீயேநானும் நானேநீயாய்க்
காயாபுரியைக் கனவெனவுணர்ந்து
எல்லாமுன்செய லென்றேயுணர
நல்லாயுன்னருள் நாட்டந்தருவாய்
காரணகுருவே கற்பகக்களிறே
வாரணமுகத்து வள்ளலேபோற்றி
நித்தியபூசை நைவேத்தியமும்
பத்தியாய்க்கொடுத்தேன் பரமனேபோற்றி
எத்தியனுதின மெளியேன்பணியக்
கூற்றினையுதைத்த குளிர்பதந்தந்து

ஆகாமதுர வமிர்தமளித்துப்
பேசஞானப் பேறெனக்கருளி
மனத்தில்நினைத்த மதுரவாசகம்
நினைவிலுங்கனவிலும் நேசம்பொருந்தி
அருணகிரியா ரவ்வைபோலக்
கருத்துமிகுந்து கவிமழைபொழிய
வாக்குக்கெட்டா தாழ்வையளித்து
கோக்கருஞான நோக்குமளித்து
இல்லறவாழ்க்கை யிடையூறகற்றிப்
புல்லரிடத்திற் புகுந்துழலாமல்
ஏற்பதிகழ்ச்சி யென்பதகற்றிக்
காப்பதுனக்குக் கடன்கண்டாயே
நல்வினை தீவினை நாடிவரினுஞ்
செல்வினையெல்லாஞ் செயமுளதாமல்
தந்தையும்நீயே தாயும்நீயே
எந்தையும்நீயே ஈசனும்நீயே
போதஞானப் பொருளும்நீயே
நாதமும்நீயே நான்மறைநீயே
அரியும்நீயே அயனும்நீயே
திரிபுரதகனஞ் செய்தவநீயே
சத்தியும்நீயே சதாசிவம்நீயே
புத்தியும்நீயே புராந்தகநீயே
பத்தியும்நீயே பந்தமும்நீயே
கதியும்நீயே மோட்சமும்நீயே

ஏகமும் நீயே என்னுயிர் நீயே
தேகமும் நீயே தேவனும் நீயே
உன்னருளன்றி உயர்துணை காணேன்
பின்னொருதெய்வம் பேசவுமறியேன்
வேகனைகொடுத்த மெய்யிது தன்னில்
வாதபித்தம் வருத்திடுசிலேத்துமம்
மூன்றுநாடியும் முக்குணமாகித்
தோன்றுவினையில் துன்பமறுத்து
நாலாயிரத்துநானூற்றுபத்தெண்
மேதாம்வினையை மெலியைக்களைந்து
அஞ்சலிலைமை யருளியேநித்தன்
பஞ்சாக்ஷரநிலை பாலித்தெனக்குச்
செல்வமுங்கல்வியுஞ் சீரும்பெருக
நல்வரமேதரும் நன்மறைநாயகா
சத்தியவாக்குச் சத்தாயுதவிப்
புத்திரனைதரும் புண்ணியமுதலே
வெண்ணீறணியும் விமலன்புதல்வா
பெண்ணுமையாள் பெற்றிடுந்தேவே
அரிதிருமருகா அறுமுகன்றுணைவா
கரிமுகவாரணக் கணபதிசரணம்
குருவேசரணம் குணமேசரணம்
பெருவயிற்றோனே பொற்றாள்சரணம்

கண்ணேமணியே கதியேசரணம்
விண்ணேயொளியே வேத்தேசரணம்
மானதவாவி மலர்த்தடத்தருகிற்
ருனத்தில்வாழுந் தற்பராசரணம்
உச்சிபுருவத் துதித்துலகளிக்குஞ்
சச்சிதானந்த சற்குருசரணம்
விக்கினவிநாயக தேவேஓம்
அரகரசண்முக பவனேஓம்
சிவசிவ மஹாதேவசம்போஓம்

வஞ்சி விருத்தம்

கணபதியென்றிடக் கலங்கும்வல்வினை
கணபதியென்றிடக் காலனுங்கைதொழும்
கணபதியென்றிடக் கருமமாதலால்
கணபதியென்றிடக் கவலைதீருமே.

வெண்பா.

ஓரானைக்கன்றை யுமைபாள் திருமகனைப்
போரானைக்கற்பகத்தைப் பேணினல்—வாராத
புத்திவரும்வித்தை வரும்புத்திரசம்பத்துவரும்
சத்திதருஞ் சித்திதருந்தான்.

நக்கீரதேவர் அருளிச்செய்த
விநாயகரகவல்-முற்றிற்று.

---

## தேவாரம்.

ஐய்யனேபோற்றிபோற்றி யமலனேபோற்றி
துய்யனேபோற்றிபோற்றி சோதியேபோற்றிபோற்றி
பொய்யனேஎனையாட்கொண்ட போதசெழுமலர்ப்போ
பூங்கையனேகைலைவாழுங் கணேசனேபோற்றி
போதமேபோற்றி விரிகதிர்மணியேபோற்றி
வேதமேபோற்றி விரிகதிர்மணியேபோற்றி
நாதமேபோற்றி நல்லருமருந்தேபோற்றி
காதமேமணக்குஞ்சோலைக் கலசைவாழரசேபோற்றி
அருமறைமுடிவேபோற்றி யானந்தவடிவேபோற்றி
பெருமதக்களிறேபோற்றி பேசரும்பொருளேபோற்றி
தருமநற்கடலேபோற்றி தத்துவப்பொருளேபோற்றி
கருமதுகாஞ்சூழ்சோலைக் கலசைவாழ்தேவேபோற்றி
ஆதியுமானாய்போற்றி அந்தமானாய்போற்றி
நீதியுமானாய்போற்றி நித்தியமானாய்போற்றி
சாதியுமானாய்போற்றி தண்ணருளானாய்போற்றி
சோதியுமானாய்போற்றி கயிலைவாழ்துரையேபோற்றி
அரியயனானாய்போற்றி அகிலமுமானாய்போற்றி
துரியமுமானாய்போற்றி துலங்கொளியானாய்போற்றி
வரியளியளகவாமி மதலையுமானாய்போற்றி
அரியநல்வளங்களோங்கும் கயிலைவாழரசேபோற்றி
விண்டலமானாய்போற்றி விண்ணவரானாய்போற்றி
மண்டலமானாய்போற்றி மன்னுயிரானாய்போற்றி
தொண்டனேன்வினையகற்றுந் தூயமாதவனேபோற்றி
கொண்டலேதழுவமேடை கலசைவாய்கோவேபோற்றி

மூத்தனைமூரலார்தம் மோகத்தையொழிவாய்போற்றி
அத்தனை வலம்வந்தன்று அருங்கனிபெற்றாய்போற்றி
பத்தர்களகத்தின்மேவும் பதுமேபத்தாய்போற்றி
இத்தரைமுழுதும்போற்றுங் கபிலைவாழிறையேபோற்றி
கண்ணனைகளிக்கவந்த மருகனைசெருதம்வேளைக்
கண்ணேயமரரேற்று மற்புதச்குன்றேபோற்றி
கிண்ணனேர்முலையாள்பாது வல்லடன்பகிழுநீல
வண்ணனேகலைசவாழும் வள்ளலேபோற்றிபோற்றி
தடவரைதனைப்பழிக்கு தானங்களான்மைபல்பூட்டும்
படவால்குலார்தம் படுகுழிதனல்விழாமல்
மடலவிழ்மலர்பாதத்தை வணங்கிநாயிருக்கச்செய்வாய்
திடமுளதவத்தோர்போற்றுங் கலசவாழ்த்தியேபோற்
சுந்தரவிளமைநீங்கித் துயர்தருமூட்பைதாங்கிச்
சத்தப்பிணியால்வாடித் தயங்கிமனமதிமயங்கி
அந்தகன்றனைக்கண்டஞ்சி யருளுகந்தென்னைக்காப்பாய்
சந்தகமலர்த்தடஞ்சூழ்க் கலசைசெங்கழுநீர்போற்றி

தேவாரம்-முற்றிற்று.

---

இராகம்-தன்னியாசி கண்ணிகள்.

சிராகலைசைவருஞ் செங்கழுநீரைங்கரனே
கிராசஜமுகனே கண்ணேகனேஸ்வரனே
முத்தனேமூவாமுதலே யருளும்பொருளே
கர்த்தனேயென்றன் கருத்தேகனேஸ்வரனே
பஞ்சதருக்கனியே பன்னுமறையுட்பொருளே

குஞ்சரநற்கன்றே கோவேகணேஸ்வரனே
அரிமகனைவென்ற வானார்மகிழ்சுதனே
கரிமுகனேசர்க்கரையே கற்கண்டேகணேஸ்வரனே
விண்ணேவொளியே விளங்குநவமணியே
கண்ணேபேரின்பக் கடலேகணேஸ்வரனே
தேனேதெவிட்டாத் தெள்ளமுதேயெங்கள்பெரு
மானேமெய்ஞ்ஞான மணியேகணேஸ்வரனே
போதப்பொருளே புகலரியநல்லருளே
வேதப்பொருளே வெளியேகணேஸ்வரனே
முத்தேபவளமே முக்கணிறையேசுடரே
சித்தேபராவடிவே தெளிவேகணேஸ்வரனே
[illegible]னாகியுள்ளே யுறையுயிராயெப்பொருட்குங்
கோனாகிநின்ற குணக்குன்றேகணேஸ்வரனே
தரைமீதில்வாழுந் தவத்தர்மனச்செந்தாக
மரைமீதிலங்கும் மதுகரமேகணேஸ்வரனே
பத்தியலாமற்பணிந்திடும் பத்தர்க்கிரங்கும்
நித்தியகல்யாணகுண நிதியேகணேஸ்வரனே
ஒளிவுமிலாத மகமுடையார்கண்களிக்குந்
திவ்யகுணாகரநற் றேவேகணேஸ்வரனே
பண்ணார்மொழியுமையாள் பாலகனேயுன்வடிவைக்
கண்ணாரக்கண்டு களிப்பேன்கணேஸ்வரனே
நித்தந்தெரிவையர் நிதம்பத்தில்வீழ்ந்துழலென்
சித்தந்தெளியவருள் செய்வாய்கணேஸ்வரனே
வள்ளலேயுன்னை வழுத்தவறியாதகொடுங்
கள்ளனெனையாளக் கருதாய்கணேஸ்வரனே

வஞ்சமனத்தாட்டமெலா மாய்ந்துசிரத்துன்பாதக்
கஞ்சமலர்சூட்டகடைக் கண்டார்கணேஸ்வரனே
முன்னம்பிறந்த பிறப்போமுடிவில்லையான்
இன்னம்பிறக்க விதிக்காதேகணேஸ்வரனே
செங்கமலவைங்கரநின் சீர்ப்பதத்திலன்பு
தங்கமலநீங்கவரந் தருவாய்கணேஸ்வரனே
பொய்யானவாழ்க்கையிலென் புத்திசுழலாதவண்ணம்
பொய்யானஓர்நிலையை விளம்பாய்கணேஸ்வரனே.
சோதியேயெங்குந் துலங்குமணிவிளக்கே
ஆதியேயேழைக் கருள்வாய்கணேஸ்வரனே.
சண்டனூர்பாசந் தனிற்படாமுன்னமெனைத்
தொண்டனாயாள்வாய் துணையேகணேஸ்வரனே
தூய்யவருள்வடிவைத் தொழும்பரபூசைநிதஞ்
செய்யவருள்செய்வாய் சிறப்பேகணேஸ்வரனே
கஞ்சமனதுடையார் கட்பொழிந்துன்பாதமலர்
நெஞ்சமலாமலரு ணிதியேகணேஸ்வரனே
பாசபபசாசுயென்னைப் பற்றியிழுக்காமலைநீ
நாசப்பத்தும்விதம் நவில்வாய்கணேஸ்வரனே
திரையற்றசாகரம்போற் சிறியேன்மனமடங்கி
உரையற்றமோனவுரு வாமோகணேஸ்வரனே
மன்னவர்கள்வாழ்வெல்லா மண்ணாவதுங்கண்டும்
இன்னமதைவாஞ்சிப்ப தென்னேகணேஸ்வரனே
முத்தொழிற்குக்காரணனே மூல்லைகைபார்மோகப்
பித்தொழியுந்தந்திரத்தைப் பேசாய்கணேஸ்வரனே

நின்கலசத்தாலே நிஜமாகாம்பியான்
சஞ்சலத்தால்வாடாத் தருமோகணேஸ்வரனே
சனியாம்சம்சாரத் தளருமிவ்வேழைமுகம்
இனியாகிலும்பார்ப்பாய் யெந்தாய்கணேஸ்வரனே
தேனேயெனுமொழியார் சிற்றின்பத்தென்னெஞ்
ஏனோவலேவ நியம்பாய்கணேஸ்வரனே
முடியாவஞ்ஞானமிருண் மூடாமலென்மனதிற்
குடியாயிருந்தாள்வாய் கோவேகணேஸ்வரனே
சொல்லுங்கடந்தசுகா நீதக்கொண்டன்மனக்
கல்லுங்கரையும்விதங் காணேன்கணேஸ்வரனே
கச்சிருக்கும்பூண்முலையார் காதலையொழித்தாள்வாய்
நச்சிருக்குங்கண்டனருள் நாதாகணேஸ்வரனே
ஐம்புலவேடர்க்காளா யடியேனுகாமலெனை
யன்புருகப்பாடவாயருள்வாய்கணேஸ்வரனே
கல்லார்மனாலைக் கழித்தேனெனைச்சுன்னை
பல்லாயலார் துணையா வார்காண்கணேஸ்வரனே
என்பதசையாலமைந்த யிவ்வுடலிலாசைவிட்டே
அன்பினுனுன்னை யறிவேனோகணேஸ்வரனே
மூவாசைவர்தென்னை மூடாமனுர்தனையான்
தேவாவென்றேத்தவருள் செய்வாய்கணேஸ்வரனே
முக்காலெனக்குவரா முன்னமேயாண்டுகொள்வாய்
திக்காவார்யாரோ செப்பாய்கணேஸ்வரனே
நித்தமுனைச்சேவித்து நின்புகழைப்பாடியுன்றன்
சித்தமகிழ்ந்திருக்கச் செய்வாய்கணேஸ்வரனே

கூற்றங்குடிகொண்டக் கொடியனுறுலுமென்றன்
சித்தம்பொருத்தாள்வாய் தேவேகணேஸ்வரனே
எல்லையிலாத்துன்பத் தேழைகலங்காதவண்ணந்
தொல்லைவினையைத் துடைப்பாய்கணேஸ்வரனே
வாதித்துமல்லாடி மட்டிமனக்குரங்கைச்
சோதிப்பதேசபெரிது செப்பாய்கணேஸ்வரனே
ஆவித்துணையே யண்ணலேயுன்னையன்றிப்
பாவிமுகப்பார்ப்பாரார் பதியேகணேஸ்வரனே
எட்டிரண்டுந்தேராத வேழையேனென்றென்னை
விட்டிடிலென்செய்வேன் விக்னேகணேஸ்வரனே
பட்டபாடெல்லாம்பார்த்து வெளியேயென்னைந்
தட்டக்கழித்தாற் றகுமோகணேஸ்வரனே
சாலவுனைப்பணியாச் சரீரச்சுமைசுமந்தே
காலமிகக்கழித்தேன் கண்ணேகணேஸ்வரனே
அடிகனமில்லாத மல்லையுமரக்கலம்போல்
அடியேகனமலைய லாமோகணேஸ்வரனே
நன்றுதீதுக்கு னடுவோனைநின்னருளை
என்றுநான்பெற்றுய்வ தெந்தாய்கணேஸ்வரனே
ஆடுங்கறங்கா யலையுமனநின்பதத்தில்
ஆடும்படிசெய்வா யருளேகணேஸ்வரனே
அல்லும்பகலும் பாறுமிப்பாவிமுகக்
கல்லுங்கண்டார்க்கரையுங் கண்டாய்கணேஸ்வரனே.

முற்றிற்று.

---